355

ஸ்ரீ
ஸர்வம் விஷ்ணுமயம் ஜகத்.

ஸ்ரீமத் சங்கராசாரியசுவாமிகள் அருளிய
துவாதசமஞ்சரிகா ஸ்தோத்திரமென்னும்

# பஜகோவிந்தம்

மூலமும், தமிழுரையும்.

இது
சில ஆப்தர்களது விருப்பப்படி
ஸ்ரீமான் ம. இராஜகோபாலபிள்ளையவர்களால்
எழுதப்பட்டு,

ஸ்ரீமான்
செ. இ. அரங்கசாமி முதலியாரவர்களாலும்,
செ. இ. திருவேங்கட முதலியாரவர்களாலும்,

சென்னை
ஆம்ப்தில் அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது.
1908.
இதன் விலை அணு 1.

ஸ்ரீ

ஸ்ரீமத்வரவரமுனயேநம:

# அவதாரிகை.



---

பிறவிப் பெருங்கடலின் கரைகாணுது, இவ்விருள்தருமாஞாலத்தே யிடருழந்தலையும் பத்தசேதனர்கள் எளிதில் நெறியறிந் துய்யும்வண்ணம், பேரருளாளராகிய பெரியார் திருவாய்மலர்ந்தருளின உறுதிபயக்கும் நூல்கள் பலவற்றுள் இப்பஜகோவிந்தமும் ஒன்று. இது பன்னிரண்டு சுலோகங்களைக் கொண்டுளது. ஸ்ரீமத் சங்கராசார்ய ஸ்வாமிகள் சிஷ்ய சகிதராய் யாத்ரை செய்து வருங்காலத்தில் "டுக்ருங் கரணே" என்னும் வியாகரணசூத்திர மொன்றையே மேலான மந்திரமெனக் கருதி உருவேற்றிக் கொண்டிருந்த ஓர் பிரமசாரியைச் சந்தித்து அந்தோ! இவனும் இவனைப்போன்ற சேதனரும் உறுதி நூலோதாது உலக நூலோதித் தம்போல் இறைமைக் குணங்க ளிலராயினரை யுளரெனவடுத்துப் பயன்காணுராய் வருந்துவதென்னென் றிரக்கமுற்று, இவர்கள் இதாகிதத்தை நன்குணர்ந்து, ஸ்ரீயப்பதியாயும், சர்வஜ்ஞனயும், சர்வ ரக்ஷகனயும், சதுர்வித பலப்ரதனயும், சகல கல்யாண குணநிதியாயும், அவாப்த சமஸ்தகாமனயும், பரஞ்சுடராயும், பரமாசாரியனயும் விள

ங்கும் பகவானொருவனையே பஜித்து நிரதிசயானந்த வீட்டைப் பெறும்படி ஷெ பிரமசாரியை முன்னிலைப்படுத்தி இச்சிறு கிரந்தத்தை யருளிச் செய்தனர். இது ஈச்வரபக்தி, அவாவொழித்தல், ஆன்மவிலக்கணம் முதலிய அரிய விஷயங்களின் மேம்பாட்டைச் சுருக்கி யினிது விளக்குவதால், தமிழ் மக்கட்கும் பிரயோசனமாம்படித் தமிழுரையுடன் வெளியிடலாயிற்று. சோர்வினால் நேரும் பிழையுளதேல் பெரியோர் பொறுப்பாராக.

வளிவழங்கு முலகினிய வழியறிந்து
  முத்திநில மருவ வாழிப்
பளிவழங்கும் பரஞ்சுடரைப் பரவும்வகை
  பயனிறையும் பஜகோ விந்த
ஒளிவழங்கு முத்தமனை யுவமையறு
  சத்துவனை யுயிர்கண் மீதே
அளிவழங்குஞ் சங்கரா சாரியனைச்
  சற்குருவை யகத்துள் வைப்பாம்.



ஸ்ரீ

சர்வம் விஷ்ணுமயம் ஜகத்.

# பஜகோவிந்தம்.

## மூலமும், தமிழுரையும்.

---

### நூல்.

---

#### சுலோகம்.

---

பஜகோவிந்தம் பஜகோவிந்தம்
பஜகோவிந்தம் மூடமதே,
ஸம்ப்ராப்தேஸந்நிஹிதேகாலே
நஹிநஹிரக்ஷதி டுக்ருங்கரணே. (பஜ)

(இதன்பொருள்)

மூடமதே - மந்தமதியுள்ளவனே, ஸம்ப்ராப்தே ஸந்நிஹிதேகாலே-(உனக்கு) முடிவுகாலம் நெருங்கும் போது, டுக்ருங்கரணே - (நீ உச்சரிக்கும்) 'டுக்ருங்கரணே' என்னும் சொல்லானது, நஹிநஹிரக்ஷதி-ரக்ஷகம் ஆகாது ஆகாது, (ஆதலால் ரக்ஷகப்பொருளான)

கோவிந்தம் - ஸ்ரீகோவிந்த மூர்த்தியாகும் எம்பெருமானை, பஜ-(நீஎக்காலத்தும்) பஜிக்கக்கடவாய்.

(விளக்கவுரை)

இம்மைமப்பயனையே பெரிதாகநினைத்து, நித்யாநித்ய வஸ்துவிவேகம்பண்ணாது வியாகரணத்திற் பண்டிதனுகும் விருப்பமேலிட்டு அதில் மனதை யூன்றினவனாய் 'டுக்ருங்கரணே' என்னும் ஓர் வியாகரண சூத்திரப்பாதத்தை ஓய்வின்றி யுருவேற்றிக்கொண்டுள்ள ஏ! மந்தமதியே! இப்புண்ணிய பூமியாகிய பரதகண்டத்தில் பிறப்பெடுப்பதே அருமை. அதிலும் மானிடப்பிறப்பை அடைவது மிகவும் அருமை. அதிலும் அங்கபங்கமின்றியும், இந்திரியபங்கமின்றியும், பிறப்பது அருமையினும் அருமை. அவ்வழகிய பிறவிபூண்டும் நிலைத்துவாழ்வதருமையன்றோ. "வேதநூற் பிராயம்நூறு மனிசர்தாம் புகுவரேனும், பாதியுமுறங்கிப்போகு நின்றதிற் பதினையாண்டு, பேதைபாலகனதாகும் பிணிபசிமூப்புத்துன்பம், ஆதலாற் பிறவிவேண்டேனரங்கமாநகருளானே" என்பது பொய்யா? மக்கள் ஒவ்வொருவர்க்கும் வேதசாஸ்திர சம்மதமாக நிர்ணயிக்கப்பட்ட காலமோ நூறுவயது. இந்நூறு வருடத்தையும் பூர்த்தியாகப் பெற்றாலும் சரிபாதியாகிய ஐம்பது வருடமும் தூக்கங் கைக்கொள்ளும். மிச்சத்தைப் பேதைபாலக கௌமார பிணிபசி மூப்புக் துன்பங்கள் பங்கிட்டுக்கொள்ளும். ஆகவே ஒருவன்

இம்மைக்கேனும் மறுமைக்கேனும் வேண்டும் பட்டனை அடைவதற்கான விஷய ஆராய்ச்சிக்கு நாளேயில்லை. புண்ணிய வசத்தால் அப்படி சிலநாள் நேறினால் அந்நாட்களை வீணாளாக்காது காமியபலன்களெல்லாம் மேன்மேலும் பிறப்பையேதருமாகையால் அவற்றை விட்டு நிரதிசய இன்ப வீட்டைத்தரத்தக்க நிஷ்காமிய விஷயாராய்ச்சியிற் றலையிட்டுயாவும் ஈச்வரார்ப்பண மாக்கி அவ்வீச்வரனே தஞ்சமென்று அவ்விறைவன் பொருள்சேர்புகழ் புரிதலன்றோ நன்று. உனக்குக் கிடைத்த இச்சொற்பநாளை 'டுக்ருங்கரணே' யில்வா ளாபோக்குவதை யொழி. 'ஆட்பார்த்துழலும் அரு ளில்கூற்றுண்மையால் ரோட்கோட்புக்காலத்தாற் கொண்டுய்ம்மின்' என்கிறபடி யமனனவன் தான் கொண்டுபோகும் ஆளை ஆராய்ந்து திரிந்துகொண் டிருப்பது நிச்சயமாதலின் ஒவ்வொருவர்க்கும் பிரயா ணம் சித்தமாய்விட்டது. இப்பிரயாணத்திற்கு வேண் டிய தருமமாகிய தோட்கோட்பை (கட்டுச்சோற்றை) யுடனே சித்தப்படுத்தினால் செல்லுமிடத்தில் இளைப் பாறலாம். சோர்வினாற் பொருள் வைத்ததுண்டா கில் சொல்லு சொல்லென்று சுற்றுமிருந்து, யார் வினவினும் வாய்திறவாத அந்த காலம் வந்தணுகி எல்லையில் வாசல் குறுகிச்சென்றால் எறிநமன்றமர் பற்றும்போது நில்லுமின் என்னும் உபாயமாய் இந்த 'டுக்ருங்கரணே' உன்னை ரக்ஷிக்குமா. ஒருபோதும்

ரக்ஷிக்காது. ஸர்வ ரக்ஷகனுய் 'ஸமோகம் ஸர்வ பூதேஷு' என்கிறபடி ஜந்மாதிகளால் உத்க்ருஷ்ட ரோடு அபக்ருஷ்டரோடு வாசியற ஆச்ரயித்தவர்க ளிடம் ஸமம் பாராட்டும் ஸ்வபாவீகனுய்த் தாங்களும் பிறரும் தஞ்சமல்லாதபோது தஞ்சமாகுமவனுய் "மா தவத்தோன் புத்திரன்போய் மறிகடல்வாய் மாண் டானை, ஓதுவித்ததக்கணையா வுருவுருவே கொடுக்க வும்" "பிறப்பகத்தே மாண்டொழிந்தபிள்ளைகளை நால் வரையும் இறைப்பொழுதிற் கொணர்ந்து கொடுத் தொருப்படுத்தவும்" வல்லவனுய் அடைந்தாரது அபே க்ஷிதங்க ளரியனவாகிலும் அவற்றைத் தலைக்கட்டு மவனுயுள்ள சர்வேச்வரனை முடிவுகாலம் நெருங்கும் போது வரும் எமதூதரை நில்லுமின் என்னும் உபா யம் (என்னிடத் தொன்றும்) இல்லை நேமியும் சங்க மும் ஏந்தினனே, சொல்லலாம் போதேயுன்னும மெல்லாஞ் சொல்லினேன் என்னைக்குறிக்கொண்டெ. ன்றும், அல்லல் படாவண்ணங் காக்கவேண்டும் அரங் கத்தரவணைப் பள்ளியானே என்று தஞ்சம்புகில் உஜ் ஜீவன மடையலாம். ஆகையால், 'காற்றுள்ளபோ தே தூற்றிக்கொள்' என்னும் பழமொழியை நினைத்து வேறுசிந்தையற்றவனுய் ஸ்ரீயப்பதியைப் பஜிக்கக்கட வாய். நீ கற்றதின் பயன் இதுவேயாம்.

"கற்றதனுலாய ப்யனென்கொல்வாலறிவ
ன்ற்றுடொழாஅ ரெனின்."

க. மூடஜஹீஹி தநாகமத்ருஷ்ணும்
குருஸத்புத்திம் மநஸிவித்ருஷ்ணும்
யல்லபஸேநிஜ கர்மோபாத்தம்
வித்தம்தேந விநோதயசித்தம். (பஜ)

(இதன்பொருள்.)

மூடஜஹீஹி - ஏ மூடா, தநாகமத்ருஷ்ணும் - பொருள்மேற்செல்லும் பேராசையை ஒழி, குருஸத்புத்திம் மநஸிவி த்ருஷ்ணும் - (அக்கொடிய ஆசையை) உன்மனசினின்றும் விலக்கி சத்புத்தியைநாட்டு, யல்லபஸேநிஜ கர்மோபாத்தம் - உனக்கு எத்தொழில் உரியதோ அத்தொழில் செய்வதால் வருகிற, வித்தம் தேந விநோதயசித்தம் - பொருளைக்கொண்டு மனசைத் திருப்திசெய்து, பஜகோவிந்தம் - ஸ்ரீமந்நாராயணனைப் பஜிக்கக் கடவாய்.

(விளக்கவுரை.)

"இன்பமிடையறு தீண்டு மவாவென்னுந் துன்பத்துட் டுன்பங்கெடின்" என்னும் பொய்யாமொழியை நோக்குமிடத்து இந்நில வுலகின்கண் ஒவ்வொருவருக்கும் நேரிடும் துன்பங்கள் அனைத்தும், ஆசையென்னும் பெருந் துன்பத்தை நோக்க இன்பமாய் முடிதலோடு ஆசையாகிய துன்பம் என்று ஒழிகின்றதோ அன்றே நித்யானந்தம் கைகூடும் என்பதும் பெற்றாம். ஆசையாவது மனைவி மக்கள்முதலிய தொடர்புபற்றி வருவ

தொன்று. இது மூன்று பிரிவினதாம். அவை மண்ணுசை, பொன்னுசை, பெண்ணுசை யென்பர் - மண்ணும் பொன்னும் ஒன்றேயாதலின் வடநூலார் இவ்வீஷணத்திரயத்தைப் பொன் பெண் புத்திரர் மீதேற்றினர். பெண்ணும் புத்திரரும் ஒன்றெனலாகாதோ வெனின் ஆகாது. என்னே, பெண்கொண்டார் பலர் தவமுழந்தும் புத்திரப்பேற்றினை யடையாமையாலென்க. பொன்கொண்டார் மண்கொள்வதுபோல் பெண்கொள்வ தரிதென்பதும் உலகானுபவமாதலின் பொன்னும் பெண்ணும் ஒன்றெனவுங்கூடாது. என்னே, "குரங்கானுலும் குலத்திலே கொள்" என்னும் பழமொழியை யொட்டிப் பணத்தையும் பெரிதுநோக்கார் நற்குலத்தார். ஆகவே வடநூலார் துணிபேபொருத்தமாயிற்று. இதனை ஸ்ரீமத்பாகவதத்துள் "விழைவெனப் படுகின்றது மென்மெல, அழல்விரிந்த கனகத்தரும்பிமென், மழலைமாதர் மருங்கிற்படர்ந்து பைங்குழவிமீது கொழுந்துவிட் டோங்குமால்" என்பதாலறியலாகும், எனவே ஆசையானது முதன்முதல் பொன்னின்மீதும் பிறகு பெண்ணின்மீதும் இறுதியில் புத்திரர்மீதும் உண்டாமென்று ஏற்பட்டது. இன்னவாசை அளவோடிருப்பின் நலமே - அளவுகெடின் துன்பமே - ஆகையால் நீ உன் வருணத்திற்கும் நிலைமைக்கும் உரித்தாகிய தொழிற்கண் தலைநின்று, எவ்விதம் ஒருவேலைக்காரியானவள் தன்எஜமானனுடைய

குழந்தையைத் தனக்கும் அக்குழந்தைக்கும் சம்பந்த மில்லையென்பதையறிந்தும் ஏற்றுக்கொண்டதொழில் நிமித்தம் தன்குழந்தைபோல் பாதுகாத்து வருவளோ அவ்விதம் உனக்கும் உற்றார் பெற்றார் முதலியவர்க்கும் பற்றில்லையென்ப துணர்ந்து கொண்ட தொழிலை வழு வறவியற்றி அதனால்வரும் ஊதியத்தில் மனத்திருப்தி யடைந்தவனாய் என்றும் ஸ்ரீயப்பதியைப் பஜிப்பா யாக - இவ்வாசையை ஆபத்சகாயனாகிய பகவான் பால் செலுத்தின் இகத்தும் பரத்தும் வேண்டும் இன் பங் கைகூடி முத்தியடையலாகும் - "ஆசைவாய்ச் சென்றசிந்தையராகி யன்னையத்தனென்புத்திரர் பூமி, வாசவார்குழலாளென்று மயங்கிமாளும் எல்லைக்கண் வாய்திறவாதே, கேசவா புருடோத்தமா வென்றுங் கேழலாகிய கேடிலீயென்றும், பேசுவாரவரெய்தும் பெருமை பேசுவான்புகில்நம்பரமன்றே."

"ஆராவியற்கையவா நீப்பினந்நிலையே, பேராவியற் கைதரும்."—

உ. நாரீஸ்தனபர நாபீதேசம்
த்ருஷ்ட்வாமாகா மோஹாவேசம்
ஏதன்மாம்ஸ வஸாதிவிகாரம்
மனஸிவிசிந்தய வாரம் வாரம். (பஜ)

(இதன்பொருள்.)

நாரீ - பெண்களினுடைய, ஸ்தனபரநாபிதேசம்

த்ருஷ்ட்வா - தனபாரத்தையும் கொப்பூழ்ப் பிரதேசத்தையும் பார்த்து, மாகா மோஹாவேசம் - மோக விகாரங் கொள்ளாதே, ஏதன் மாம்ஸ வஸாதி விகாரம் - இவை மாமிசம் கொழுப்பு முதலியவற்றின் கூட்டுறவென்று, மனஸிவிசிந்தய வாரம் வாரம் - அடிக்கடி மனதில்நினைத்து, பஜகோவிந்தம்-சர்வேச்வரனைப் பஜிப்பாயாக.

(விளக்கவுரை.)

"பெண்கள்பால் வைத்தநேயம் பிழைப்பரோ சிறியோர் பெற்றால்." என்றனர் கம்பநாட்டாழ்வார். நிரதிசயவின்பத்தைநாடவேண்டியநீ இச்சிற்றின்பத்தை யிச்சித்திருப்பதென் என்ற தோழனைப் பார்த்துஓர்தலைமகன் நன்று சொன்னாய், கண்டுகேட்டுண்டு மோந்துற்றறியும் ஐம்புலன்களையும் ஏககாலத்தில் அனுபவிக்கலுற்றார்க்குத் தாம்விரும்புமகளிரைவிட பிறவொன்றுண்டோ? அம்மகளிரால் எளிதில் அடையக்கூடிய இன்பம்போல் வருந்தாமல் அடையக்கூடுமோநீயுரைக்கும் நிரதிசய வின்பம். "தாம் வீழ்வார் மென்றோட்டுயிலினினிதுகொல் தாமரைக் கண்ணானுலகு". "அரிசனமேனிநல்லாளணிதுகிலசைவின் சீரால், கரிசனமன்னகொங்கை காண்டலுந் தளர்ந்தோர்காளை, தெரிசனந்தன்னிலீதென்சிந்தையைப் பிணித்ததென்றால், பரிசனந்தனிலென்னாமோவென்றுயிர்பதைத்து நின்றான்" என்கிறபடி அம்மகளிரவய

வங்களின் காட்சியே ஒரு திடசித்தனது மனதையும் பேதிக்குமாயின், பரிசத்தால்வருந்தன்மையை யறிவாரார் என்னுமாப்போல் மகளிரின்பமே சிறந்ததென்று ஈனையவலமாக்காதே. இவ்வின்பம் முடிவுபெற்றிருப்பதாலும் முடிந்த அனந்தரம் நினைக்கவும் அசங்கியமாய் ஸ்நானஞ் செய்தே வெளிவரவேண்டுவதாலும்இதனை இத்தன்மைத்தென்று தெரிந்துகொள். அன்றியும் தேகத்தின் லக்ஷணத்தைப் பார்க்கிலோ பாஞ்சபௌதிகமாய், அநித்யமாய், சுகதுக்கங்கட்கே துவாய் ஆன்மாவிட்டுப் பிரியின் தரிசிக்கவும் பரிசிக்கவும் யோக்யதை யற்றதாய் அஞ்ஞானம், அந்யதாஞானம் விபரீத ஞானங்களுக்குப் பிறப்பிடமாய்த் தீண்டாவழும்புஞ் செந்நீரும் சீயுநரம்புஞ் செறிதசையுமாதிய வேண்டாநாற்றம் வீசும் மாமிசபிண்டாகாரமாய் முடிந்துளது. "தங்கள் தனமிருக்கத் தார்வேந்தரெல்லாரும், எங்கள் தனத்துக்கே யிச்சிப்பார் - எங்கள்தனம் - கச்சிருக்கும் பாலிருக்கும் காமபாணங்கள்பட்டுப், பிச்சிருக்கும் வேண்டாம்பிளாய்" என்கிறபடி பேதைமையால் மகளிரது தனபாரத்தைச் சொரூபமாத்திரையிற்கண்டுபிரமித்தானொருவனை விளித்து ஓர் மடநல்லாள் தனபாரத்தின் சொரூபத்தை உள்ளபடி விளக்கி யதன்மேற் செல்லும் இச்சையை யொழி என்றதையுங் கவனி. இப்படி மகளிரது மாமிசாகாரத்தின்மீதுற்ற வாசையானது 'ஆசலம்புரி னைம்

பொறிவாயிலுங், காசலம்பு முலையவர்கண்ணெனும், பூசலம்புங் நெறியின் புறஞ்செல்லா' என்கிறபடி நிற்கவேண்டும் நிலையினிற்கில் நலம்.

"பாண்டியன்றூரானேன் பசலைமுலைப் பாலானேன்
ஆண்டிகையிலேந்தியதோன் றூனேனே—வேண்டியபோ
துள்ளங்கைத்தேனுனே னேர்மதலை பூத்ததன்பின்
உள்ளங்கைத்தேனுனக்கு,"

என்னுமிது ஓர் அன்னமன்னுள் தன்பெருத்த ஸ்தனம் இப்போது ஆண்டிகையிலுள்ள விபூதிபையைப்போல் தொங்கிப் பசலைநிறம்பெற்றுப் பால்கொண்டுண்மையின் தலைமகனுக்கு வேண்டியபோது உள்ளங்கைத் தேனுத்திருந்ததான் பாண்டியன் மாலையாய் (வேம்பாய்) மனவெறுப்புக்குரியளானேன் என்பதை விளக்குவதால் ஆடவர் தாம் முதற்கண்டதோற்றம் தளர்வெய்திபதைக் காணின் அதனைவிட்டுப் புதுத்தோற்றத்தை நாடுவரென்பது திண்ணமல்லவா.?

"காதன் மிக்குழிக்கற்றவுங் கைகொடா
வாதல்கண்ணகத் தஞ்சனம் போலுமால்
தாதுகுற்றுபு தங்கியவன்டனுர்க்
கேதமிற்றெனவெண்ணுமென் னெஞ்சமே."

என்னு மூதுரைப்படி அறிவாளராயினும் காமத்துக்கிடங் தருவரேல் துன்புறுவரெனத் தெரிந்தாம். மற்றும் "அறவினைப் மான்றபொருளும் பிறவினையும் பெண்ணேவல் செய்வார்கணில்' என்பதும்

"விண்குலாவுயர் விண்ணவராயினும், பெண்கள்காமம் பிடித்தவருய்வரோ, புண்களாகிப் புரந்தரன் மெய்யெலாம், கண்களானது காமத்தினலன்றே"

என்பது முணரக்கடவாய். ஆகையால்

"ஈசிபோமினிங்கிரேன்மினெங்கியிளைத்திருள்ளங்
கூசியிட்டீரென்றுபேசுங் குவளையங் கண்ணையர்பால்
நாசமான பாசம்விட்டு நன்னெறி நோக்கலுறில்
வாசமல்கு தண்டுழாயான் வதரி வணங்குதுமே."

என்கிறபடி இவ்வாசையை விட்டுப் பரந்தாமனைப் பஜிப்பாயாக.

"வாணிலா முறுவல் சிறுநுதல் பெருந்தோள்
மாதரார் வனமுலைப் பயனே
பேணினேனதனைப் பிழையெனக்கருதிப்
பேதையேன் பிறவிநோயறுப்பான்
ஏணிலேனிருந்தே னெண்ணினே னெண்ணி
யிளையவர் கலவியின் றிறத்தை
நாணினேன் வந்துன் றிருவடி யடைந்தேன்
நைமிசாரணியத்துளெந்தாய்."

"தந்நலம் பாரிப்பார் தோயார் தகைசெருக்கிப்
புன்னலம் பாரிப்பார் தோள்."

ரு. நளினீதளக்த ஜலமதிதரளம்
தத்வஜ்ஜீவித மதிசயசபலம்
வித்தி வியாத்யபி மானக்ரஸ்தம்
லோகம்சோகஹ தஞ்சசமஸ்தம். (பஜ)

(இதன்பொருள்)

நளினீதளக்தஜலம் - தாமரையிலையைச்சார்ந்த தண்ணீர் (அதில் நிலைபெறாது) அதிதரளம் - மிகவும் தள்ளாட்டமுறும், தத்வஜ்ஜீவிதம்-அதுபோல் (உடலைச் சார்ந்த) உயிரும், அதிசயசபலம் - (அவ்வுடற்கண்) மிகவும் நீடித்திராத நிலையினதாம், லோகம் ஸமஸ்தம் - உலகிலுள்ள சகல ஜீவர்களும், வியாதி அபிமானக்ரஸ்தம் - நோயினுலும் அபிமானத்தினுலும் கட்டுண்டவர்களாய், சோகஹதஞ்ச - சோகத்திலழுந்தியிருக்கிறார்கள் (என்று) வித்தி - அறிந்து, பஜகோவிந்தம்-பகவானைப் பஜிக்கக்கடவாய்.

(விளக்கவுரை.)

தாமரையிலையிலுள்ள ஜலமானது அதில்நிலைபெறாது தள்ளாடுந்தன்மையைக் கொள்வதுபோல் வினைவசத்தால் உடலைப்பற்றிய உயிரும் அவ்வுடலினிடத்து நிலையாத் தன்மையைக் கொண்டுளது. உயிருக்கும் உடலுக்கும் சம்பந்தமில்லை யென்பதை நீயுய்த்துணரவேண்டும். உயிரோ சேதனமாயும் அருவாயும் நித்யமாயும் உள்ளது - உடலோ அசேதனமாயும், உருவாயும், அநித்யமாயும் உள்ளது. ஆகையால் சம்பந்தம் எவ்வகையுண்டாம் - வினைகாரணமாய் வாத பித்த சிலேத்தும நோய்களுக் கிருப்பிடமா யமைந்த உடலில் உயிரானது அந்நோய்கள் மேற்கிளம்பாது அடங்கியிருக்

குங் காலத்தில் ஓதக்குக் குடியிருந்து அந்நோய்கள் மேற்கிளம்பி வருத்துங்காலத்தில் உடலைவிட்டுப் பிரிந்துபோம். "உடம்பொடுநின்ற உயிருமில்லை" என்பர் பெரியோர். "குடம்பைதனித்தொழியப் புட்பறந்தற்றே யுடம்போடுயிரிடைநட்பு" என்கிறபடி (கருவாயிருக்கும்போது பறவைக்கு ஆதாரமாய்ப்) பிரியாதிருந்த முட்டையானது பிரிந்து கிடக்க அதனுள்ளிருந்த பறவையானது பருவமானதும் எவ்விதம் வெளிப்பட்டு அம்முட்டையுள் மீண்டும் புகாதோ அவ்விதசம்பந்தந்தான் உடற்கும் உயிர்க்கும் உண்டு. இதனையறிகிலராய் மக்கள் உடம்போடு நீடித்து வாழ்வதாக மயங்கிப் பலவகை நோய்களாலும் நான் எனது என்னும் அகங்கார மமகாரங்களாலும் பீடிக்கப்பட்டு மேன்மேலும் பிறப்பையே தேடிக்கொண்டு தக்கிக்கிறார்கள். அகங்கார மமகாரத்தை வாசனையோ டொழித்தவனே இன்பவீட்டுக்குரியனாவான். "நீர்நுமதென்றிவை வேர்முதல்மாய்த்திறை சேர்மி னுயிர்க்கதன் நேர்நிறையில்லே" என்னும் ஸ்ரீசூக்தியைக் கவனிப்பாயாக. "சென்றநாளெல்லாம் சிறுவிரல்விட் டெண்ணலாம், நின்றநாள்யார்க்கும் உணர்வரிது" "நெருநலுளனொருவ னின்றில்லையென்னும் பெருமையுடைத்திவ்வுலகு" இத்யாதி அருண்மொழிகளை நினைத்து உடனே பகவத்கைங்கரியத்திலீடுபட்டு ஸ்ரீமந்நாராயணனைப் பஜிப்பாயாக.

" மின்னினிலையில, மன்னுயிராக்கைகள்
என்னுமிடத்திறை, யுன்னுமினீரே"

" வீழ்நாட்படாது நன்ருற்றினஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல்."

ச. யாவத்வித்தோ பார்ஜனஸக்தஃ
தாவன்நிஜபரி வாரோரக்தஃ
பச்சாத்ஜீவதி ஜர்ஜ்ஜரதேஹே
வார்த்தாங்கோபிந ப்ருச்சதிதேஹே. (பஜ)

(இதன்பொருள்)

யாவத் - எதுவரையில், வித்தோபார்ஜனஸக்த: - (நீ) பணம் சம்பாதிக்கச் சக்தனு யிருக்கின்ருயோ, தாவத் - அதுவரையில், நிஜபரிவாரோரக்தஃ - (உன்) மனை மக்களாதி பரிஜனங்கள் (உன்மீது) பக்ஷம்பூண்டிருப்பார்கள், பச்சாத் - அதற்குப்பின், ஜர்ஜ்ஜரதேஹேஜீவதி - தளர்வுற்ற உடலானது பிராணனேடிருந்தாலும், வார்த்தாங்கோபி நப்ருச்சதிதேஹே -உன் தேக ஆரோக்யத்தைக்குறித்து அவர்கள் ஒருவரும் விசாரிக்கமாட்டார்கள், (இதையறிந்து) பஜகோவிந்தம் - ஆபத்பந்துவாகிய பகவானைப் பஜிக்கக்கடவாய்.

(விளக்கவுரை)

" பொருளில்லார்க் கின்பமில்லை புண்ணியமில்லையென்றும், மருவியகீர்த்தியில்லை மைந்தரிற் பெருமையில்லை, கருதிய கருமமில்லை கதிபெற வழியுமில்லை,

பெருவிலந்தனிற் சஞ்சாரப்பிரேதமாய்த் திரிகுவாரே'' என்பதை நினைத்து நீ பொருள்தேடப் புகுவது உன் மனைவி மக்கள் உற்றார் பெற்றார் முதலியவரனைவரும் உன்னிடம் பக்ஷம்பாராட்டி யுன்னைக் கனப்படுத்தவேண்டுவதற்குத் தானே. இதனைத் தீர்க்காலோசித்துப் பார்க்கின் உனது தேகமானது நல்லஸ்திதியிலிருந்துநீ கஷ்டப்பட்டுப் பொருள்தேடி யளிக்கும் பரியந்தமே அவர்கள் உன்னைத் துதியாகிற்பரென்றும் உன்தேகம் நோய்முதலியவற்றால் தளர்ந்து பொருள்தேட அசக்தியாய் நீ வீட்டில் உட்காரநேர்ந்தால் உன்னை மதித்து உன்னோடுரையாடவு மாட்டாரென்றும் ஏற்படவில்லையா. இது உலகானுபவம். "தந்தை தாய் தமர் தாரம்மகவென்னு மிவையெலாஞ் சந்தையிற்கூட்டம் இதிலோ சந்தேகமில்லை மணிமாடமாளிகையாதி சதுரங்கசேனையுடனே வந்ததோர் வாழ்வுமோ ரிந்த்ரஜாலக்கோலம் வஞ்சனை பொறாமைலோபம் வைத்தமனமாங்கிருமி சேர்ந்தமலபாண்டமோ வஞ்சனையிலாத கனவே'' என்று பிறர்கூறுவதும் உரைக்கடவாய். "பொருள்கையுண்டாய்ச் செல்லக்காணிற் போற்றியென்றேத் தெழுவர், இருள்கொள் துன்பத் தின்மைகாணில் என்னேயென்பாருமில்லை'' என்னும் ஸ்ரீசூக்தியை மனங்கொண்டு "கொண்டபெண்டிர் மக்கள் உற்றார் சுற்றத்தவர்பிறரும், கண்டதோடு பட்டதல்லால் காதல்மற்றியாதுமில்லை, எண்டிசையுங் கீழும்மே

லும் முற்றவும்உண்டபிரான், தொண்டரோமாய் உய்யலல்லால் இல்லைக்கண்டீர் துணையே" என்று ஸ்ரீபரந்தாமனைப் பஜனைசெய்.

"கொண்டபெண்டிர்தான்முதலாக் கூறுமுற்றார்கன்மத்தால்
அண்டினவ ரென்றே யவரைவிட்டுத்—தொண்டருடன்
சேர்க்குந் திருமாலைச் சேருமென்று ஞர்க்குமிதம்
பார்க்கும்புகழ்மாறன் பண்டு,"

" இருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு."

ரு. யாவத் பவனோ நிவஸதிதேஹே
தாவத் ப்ருச்சதி குசலங்கேஹே
கதவதி வாயௌ தேஹாபாயே
பார்யாபிப்யதி தஸ்மின்காயே. (பஜ)

(இதன்பொருள்.)

யாவத்பவனோ நிவஸதி தேஹே – எது பரியந்தம் உன்தேகத்தினிடம் பிராணவாயுவானது குடிகொண்ளேதோ, தாவத் ப்ருச்சதி குசலங்கேஹே - அதுபரியந்தம் உனது உற்றார் பெற்றார் முதலியோர் உன் சுகத்தை விசாரிப்பர், கதவதி வாயௌ தேஹாபாயே - உன்தேகத்திற்கு அபாயமுண்டாய் உயிரானது தேகத்தைவிட்டுப் பிரிந்தகாலையில், பார்யா பிப்யதி தஸ்மின்காயே - உன்மனைவி முதலியோர் அவ்வுடலைக் கண்டு பீதியுறுகின்றார்கள். இதனை யறிந்து, பஜகோவிந்தம் - ஆபத்பந்துவாகிய பகவானைப் பஜிப்பாயாக.

(விளக்கவுரை.)

நீ உயிருடனிருக்கும் பரியந்தமே உன் மனைவி மக்களாதியோர் உனது க்ஷேமலாபத்தை எதிர்பார்த்திருப்பர். பிராணன் நீங்கிலோ உன துடலைக்கண்டு அச்சங்கொண்டு அதனை உடனே வெளிப்படுத்தி ஸ்நானஞ்செய்வர். "பெண்டுபிள்ளைக் கென்னவாட்டம் நம்மைப் பிடுங்கித்தின்பதில் நாட்டம்" என்கிறபடி அவர்கள் நீஜீவித்திருக்குமளவும் உன்னை எதிர்பார்ப்பது தஞ்சுகத்தை முக்கியமாய் நாடி யென்பதை யறியக்கடவாய். நீகூத்தாடுமளவும் அவர்கள் உன்னுடன் கூடியிருந்து அக்கூத்து முடிந்ததும் விலகிப்போவார்கள். ஆகையால் அபந்துக்கள் பக்கல் புத்திபண்ணாது இப்போதே சர்வ பந்துவாய் விளங்கும் ஸ்ரீமந்நாராயணனைப் பஜிக்கக்கடவாய்.

"நல்ல புதல்வர் மனையாள் நவையில்கிளை
இல்ல நிலமா டிவையனைத்தும்-அல்லலெனத்
தோற்றியெரி தீயில் சுடுமேல் அவர்க்கெளிதாம்
ஏற்றரும்வை குந்தத் திருப்பு."

"சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய்."

௬. அர்த்தமனர்த்தம் பாவயநித்யம்
நாஸ்தி தத:ஸுக லேசஸ்ஸத்யம்
புத்ராதபிதனபாஜாம் பீதி:
ஸர்வத்ரைஷா விஹிதாரீதி: (பஜ)

(இதன்பொருள்.)

அர்த்தம்-தனமானது, அநர்த்தம்-கெடுதியைத்தாத் தக்கதென்று, நித்யம்-எக்காலமும், பாவய-சிந்திக் கக்கடவாய், (அத்தனத்தினால்) லேசஸ்-அணுமாத் திரமேனும், தத꞉ஸுகநாஸ்தி-சுகமில்லை யென்பது, ஸத்யம்–உண்மை, (ஏனென்றால்) புத்ராதபிதனபா ஜாம் பீதி:–தனமாதிய சம்பத்தனைத்தும் கொண்டு ள்ள செல்வர்களுக்கும் புத்திர மித்திராதியோராற் பயம்நேரிடுகின்றது, ஸர்வத்ரைஷா விஹிதாரீதி:-எல் லாருடைய அநுபவத்திலுள்ள இப்பழக்கம் எங்கும் ஏற்பட்டிருக்கின்றது, (ஆகையால் இவ்வாசையை விட்டு) பஜகோவிந்தம்-ஸ்ரீயப்பதியைப் பஜனைசெய்.

(விளக்கவுரை)

ஆராய்ந்துபார்க்கின் தனத்தால் விளைவது கெடுதி யேயன்றிச் சுகமில்லையென்பது உலகாநுபவம். இது உள்ளளவும் துன்பமாகவே முடியும். இதனைத் தேட ஆரம்பிக்கும்போதும் தேடியபின் திருடர் முதலியோ ராற் சிதைவுறாவண்ணங் காக்கும்போதும் எடுத்துக் கொண்ட மனக்கவலையும் பிரயாசையும இவ்வளவெ ன்று சொல்லக்கூடுமா.

"கோடிபொன்னுடையவரெனினுங் கோமுடி
சூடிய வேந்தரேயெனினுந் தன்பொருட்
கூடியவாழ்க்கையானதிக் கூறுங்கால்
நீடியசுகமுளோர் நிலத்தினில்லையே."

என்பது சத்தியமன்றோ ஆழ்ந்துநோக்கின் தனவான்களிடமுள்ள நவமணிகள் கல்லுகளாகவும், பொன் வெள்ளி முதலிய லோகங்கள் மண்ணுங்கட்டிகளாகவும், பட்டு முதலிய ஆடைகள் பருத்திநூலாகவும் பூச்சியின் கூடாராகவும் நாய்த்தோல் உரோமமாதியாகவும், புழுகுகத்தூரி முதலிய வாசனைத்திரவியங்கள் பூனையின் மலமாகவும், மற்றும் பாலுந்தேனும் பசுவின் இரத்தம், வண்டின் எச்சிலாகவு மல்லோமுடியும். இவற்றால் அவர் கொள்ளும் செருக்கும் ஓர் செருக்கா. காமக் குரோத லோபமோகமத மாச்சரியங்களைப்பிறப்பிக்கும் இத்தனம் தன்னைப்பாதுகாப்போரை எமன் வந்தழைக்கும்போது பாதுகாக்குமா? குடிகெடுக்கவல்லது இதனைவிட வேறொன்றுண்டோ. இதனை விரிக்கில் பாரதந்தானே. துரியோதனாதியர் இதனாற் பட்டபாடு தெரியாதாரெவர். பெரியார் இதனை ஆட்கொல்லி என்றது பொய்யா? "சிறியரே மதிக்குமிந்தச் செல்வம்வந் துற்றஞான்றே, வறியபுன் செருக்குமூடி வாயுளார் மூகராவார், பறியணி செவியுளாரும் பயிறரு செவிடராவர், குறிபெறுகண்ணுளாருங் குருடராய் முடிவரன்றே" என்கிறபடி இதனை யடைந்தோர் அகங்காரமுற்று வாயிருந்தும் ஊமையராயும், செவியிருந்தும் செவிடராயும், கண்ணிருந்தும் குருடராயும், விளங்குவரன்றோ! சுழலும் படியான சக்கரம்போலும், தோன்றிமறையும் மின்

ணலேப்போலும் கபடங்கொண்ட வேசையைப்போலும் விளங்கும் இத்தனத்தைச் செல்வமென்றது "தரித்திரந் தரித்திரமென்னுந் தாரணி, சிரித்திடச் செல்வமே செல்வமென்னும்" என்கிறபடி செல்வம் (ஸிலத்திரோம்) என்னும் கருத்தை வெளிப்படுத்துவதினலல்லவா. ஆகையால் இதனை நன்காலோசித்து இப்பொருள்மேற் செல்லும் ஆசையை ஒழித்து மெய்ப்பொருளாகிய ஸ்ரீயப்பதியைப் பஜிக்கக்கடவாய்,

"ஆனத செல்வத்தரம்பையர்கள் தற்சூழ, வானாளுஞ்செல்வமும் மண்ணரசும் யான்வேண்டேன், தேனார்பூஞ் சோலைத்திருவேங் கடச்சுனையில், மீனாய்ப் பிறக்கும் விதியுடையேனவேனே."

"பொருளல்லவற்றைப் பொருளென் றுணரும்
மருளானும் மாணாப்பிறப்பு."

எ. பாலஸ்தாவத் க்ரீடாஸக்த:
தருணஸ்தாவத் தருணீஸக்த;
விருத்தஸ்தாவத் சிந்தாஸக்த:
பரேபிரம்மணி கோபிஸக்த:. (பஜ)

(இதன்பொருள்)

(ஒருவன்) பாலஸ்தாவத் க்ரீடாஸக்த: - இளமைப் பருவத்தில் விளையாட்டில் ஆசைகொண்டிருக்கிறான்,

தருணத்தாவத் தருணீஸக்தஃ-யௌவனப் பருவத்தில் யௌவன ஸ்திரீகளிடம் இச்சை கொண்டிருக்கிறன், விருத்தஸ்தாவத் சிந்தாஸக்த:-கிழப்பருவத்தில் வியாகூல சிந்தை யுடைவனுயிருக்கிறன், பரே பிரம்மணி கோபிநஸக்தஃ - பரப்பிரஹ்மமாகிய ஸ்ரீமந்நாராயணனிடத்தில் ஒருவனும் விருப்பங்கொண்டவனுயில்லை. (இதை நன்குணர்ந்து) பஜகோவிந்தம்-பகவானைப்பஜி.

(விளக்கவுரை)

"தோற்றுமேழ்வகைப்பிறவியு மிரிதரத்தொலைத்து, மாற்றுமானிடராயிவண் மருவியுமாயன், ஆற்றல்சேர் பதமன்பொடு நினைந்துவீடடையார், கூற்றினுற்றுயர் வாரவர் மடமையார்குணிப்பார்" என்றுர் பிரகலாதாழ்வார். இதனுல் " ஊர்வபதினுென்று மொன்பதிமானுடம், நீர்பறவை நாற்காலோர் பப்பத்தாம் - சீரிய - பந்தமாந்தேவர் பதினுலயன்வகுத்த, அந்தமில் சீர்த் தாவரநாலைந்து" என்கிறபடி எண்பத்துநான்கிலக்ஷ யோனிபேதங்களைக்கொண்ட ஊர்வன, நீர்வாழ்வன, பறப்பன, நான்குகாலுள்ளன, ஸ்தாவரம், மானுடம், தேவர் என்னும் எழுவகைப்பட்ட தோற்றங்களுள் மானுடமொன்றே இவ்வேழையுந் தொலைக்கும் ஆற்றல்கொண்டுளதென்றும், அத்தகைய மானிடப்பிறவிபூண்டும் பிறப்பறுக்கும் வழிதேடாது "ஆண்டுபத்துட னாந்துகழிவுறின், காண்டகுந்திறற்காளை

யெனவெழீஇ"ச், "சிலம்படியுருவிற் கருநெடுங்கண்ணார் திறத்தனாய் அறத்தையேமறந்து,புலன்படிந்துண்ணும் போகமேபெருக்கிப்", "மீளசோரக் கண்ணிடுங்கிப் பித்தெழமூத்திருமித், தாள்கள்நோவத் தம்மில் முட்டித் தள்ளிநடந்து", "தீக்கண்சிந்தறச் சிறியெமபடர்,வீக்கவந்து விழிக்கெதிர்"படும்போது ஆக்கைசோர்தர அருந்துயருழந்து வெம்புகின்ற எரிநரகுக்கு விருந்தாவானது பேதைமையைக்கண்டு கணிக்கவல்லாரிலரென்றும், அம்மானிடப்பிறவியி னருமையை யுணர்ந்தவன் "நெல்லறுக்கவோர்காலம் மரமறுக்கவோர் காலம் நெடியபாரக்,கல்லறுக்கவோர் காலம் மலர்கொய்யவோர்காலக்கணிதமுண்டு, வல்லரக்க னனையநமன் நினைந்தபோ தெல்லாநம் வாழ்நாளென்னும், புல்லறுக்கவரு" வானென்பது திண்ணமாதலின் காலதாமதமின்றிக்

"காமம்யாவையுந்தருவதும் அப்பதங்கடந்தால்
சேமவீடுறச்செய்வதுஞ் செந்தழன்முகந்த
ஓமவேள்வியினுறுபத முய்ப்பதுமொருவன்
நாமமன்னதுகேணமோ நாராயணாய"

என்கிறபடி சர்வாதாரமாய்த் தன்னையடைந்தாரது விருப்பமனைத்தையுந் தலைக்கட்டிக்கொடுப்பதாயுள்ள பரப்பிரஹ்மத்தின் திருநாமமாகிய "ஓம்நமோநாராயணாய" என்னுந் திருமந்திரத்தைக் குருமுகமாய்ப்பெற்றுக்

"காவலிற்புலனைவைத்துக் கலிதன்னைக்கடக்கப்பாய்ந்து
காவலிட்டுழிதருகின்றோம் நமன்றமர்தலைகண்மீதே
மூவுலகுண்டுமிழ்ந்த முதல்வநின்னுமங்கற்ற
ஆவலிப்புடைமைகண்டா யரங்கமாநகருளானே"

என்கிறபடி நிரதிசயானந்தக்கடலில் மூழ்குவானது அறிவே அறிவென்றும் விளக்கமாகின்றதல்லவா? ஆகையால் "முக்கட்டேவனு நான்முகத்தொருவனு முதலா மக்கட்காறுமிம்மந்திரம் மறந்தவர்மறந்தார்" என்பதை யுளங்கொண்டு உடனே ஸ்ரீமந்நாராயணனது கல்யாணகுணங்களி லீடுபடக்கடவாய்.

"வாடினேன்வாடி வருந்தினேன் மனத்தாற்
பெருந்துயரிடும் பையிற்பிறந்து
கூடினேன்கூடி யிளையவர்தம்மோ
டவர்தருங் கலவியேகருதி
ஓடினேனோடி யுய்வதோர்பொருளால்
உணர்வெனும் பெரும்பதந் தெரிந்து
நாடினேனாடி நான்கண்டுகொண்டேன்
நாராயணாவென்னும் நாமம்."

"அறவாழியந்தணன் றாள்சேர்ந்தார்க்கல்லால்
பிறவாழி நீந்தலரிது."

அ. காதேகாந்தா கஸ்தேபுத்ரः
ஸம்ஸாரோவிய மதீவவிசித்ரः
கஸ்யத்வம் கःகுத ஆயாதः
தத்வம்சிந்தய ததிஹப்ராந்தः (பஙு)

(இதன்பொருள்.)

காதேகாந்தா கஸ்தேபுத்ர: கஸ்யத்வம் க:குத ஆயாத: - உனது பாரியாள் யாவள்? புத்திரன் யாவன்? நீயார்? எவ்விடத்திருந்து தோன்றினை?, ஸம்ஸாரோவிய மதீவவிசித்ர: தகிஹப்ராந்த: - இச்சமுசாரமானது மிகவும் விசித்திரம் பொருந்தியுளது ஆதலால் நீ பிராந்தி (மயக்கம்) கொண்டிருக்கிறாய், தத்வம்சிந்தய - தத்துவத்தை (உண்மையை) சிந்தித்தவனாய், பஜகோவிந்தம் - ஸ்ரீபரந்தாமனைப் பஜிப்பாயாக.

(விளக்கவுரை)

பத்தசமுசாரியானவன் தான் யாரென்றும், தனக்காதாரமான தலைவன்யாரென்றும், தன்னைப் பெண்டு பிள்ளைகள்கூடிய சமுசாரபந்தத்தில் பிரமையடையச் செய்துவைத்த தடையாதென்றும், இத்தடையினின்றும் நீக்கவல்ல உபாயம் யாதென்றும், உபாயந்தெரிந்துழி சித்திக்கும்பலன் யாதென்றும் ஒருபோதும் சிந்திப்பதில்லை. அதனாற்றான் அவன் கேவலம் சஞ்சித ஆகாமிய பிராரத்த கர்மவசத்தனாய் மேன்மேலும் பெருந்துயரிடும்பைக்கண் பிறந்து ஆதியாத்மீக ஆதிபௌதீக ஆதிதெய்வீகமாகிய தாபாக்கினியால் தகிப்புண்டு வருந்துகிறான். இவ்விசாரம்புரியாத இவனிலும் விலங்கேமேலன்றோ? "அம்பொன்னரங்கர்க்கும் ஆவிக்கும் அந்தரங்க, சம்பந்தங்காட்டித் தடை

காட்டி—யும்பர், திவமென்னும்வாழ்வுக்குச் சேர்ந்த நெறிகாட்டும்'' சதாசாரியன் திருவடி யடைந்து "பொங்கைம்புலனும் பொறியைந்தும். கருமேந்திரிய மைம்பூத, மிங்கிவ்வுயிரேய் பிரகிருதி மானுங் காரமனங்கள்" என்று தத்வதர்சியான ஆழ்வார் அருளிச்செய்த தின்படி சப்த, ஸ்பர்ச, ரூப, ரஸ, கந்தம் என்னும் விஷயங்களைந்தும், செவி, மெய், கண், வாய்,மூக்கு என்னும் ஞானேந்திரியங்களைந்தும் வாக்கு, பாதம், பாணி, பாயு, உபஸ்தம் என்னும் கன்மேந்திரியங்களைந்தும், மநஸ்ஸு ஒன்றும், பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் என்னும் பூதங்களைந்தும், பிரகிருதி, மஹத்து, அகங்காரம் என்னும் மூன்றும் ஆகிய இருபத்துநான்கு தத்துவங்களையும் உள்ளபடியுணர்ந்து'' ஆதலாற் பகுதி தத்துவ மூவெட்டதற்குமே னின்றதுசீவன், ஓதுமச்சீவன் நாரணற்கல்லா லொருவருக்கடிமையுமல்லன், வேதநூலுரைத்தபடி யிதற்கு விரோதமாயுரைத்த தத்துவத்தின், பேதமானதெலா மவைதிகரானோர் பேசுதல் மோகனப்பிராந்தி'' என்கிறபடி அவ்விருபானுன்கு தத்துவங்கட்குமேல் நின்றது ஜீவாத்மாவென்றும், அது பரமாத்மாவாகிய ஸ்ரீமந்நாராயணற்கே யடிமைப்பட்டுள்ளதென்றும் அறியவேண்டும். இஃதறிந்தால் "மாயையென்றொருத்திதன்பால் மனமெனுமைந்தன்றோன்றித், தூயநல்லறிவன்றன்னைச்சொரூபமின்றாக்கிவை

த்தான், தாயொடுதந்தைமக்கள் தாரமென்றிவர்பா ல்வைத்த, நேயமுமவன்றன்னாலே (மனத்தினாலே) நிகழ்ந்தநேர்நினைவு" என்பது விளங்கும்; விளங்கவே "குயின்றவைம்பொறிவாய்நின்று குறித்தவைம்பொ ருளுந்தானே, அயின்றுமுக்குணங்களோடும் அறுவ கைப்படைகளோடும், பயின்றரசாளுமந்த மனமெனு ம்பகைவனங்கே, துயின்றபோதொளித்துநின்ற தோ ன்றலுந் தோன்றுங்கண்டாய்" என்கிறபடி மனமான து மெய், வாய், கண், மூக்குச் செவி என்னும் ஐந்து பொறிகளின்வாயிலாய் முறையே ஸ்பரிச, ரஸ, ரூப, கந்த, சப்தங்களாகிய விஷயங்களைத் தன்னிஷ்டப் படி புஜித்து சத்வ, ரஜோ, தமோகுணங்களுடனும் காமக்குரோத லோப மோக மதமாச்சரிய மென்னும் அறுவகைப் படைகளுடனும்கூடி அரசு செலுத்தும் போது அறிவாகியபுருடன் "துஷ்டரைக்கண்டால் ஒருஅடி தூரகில்" என்னும் பழமொழிக்கிணங்கிப் பதுங்கிநின்று அம்மனமாகிய பகைவன் துஞ்சுங்கால ம் வெளிப்படுவன் என்னும் ஞானம் உதயமாம். இஞ் ஞானத்தால் "கெடுக்கவல்லதுங் கெட்டவர்தங்களை எடுக்கவல்லதும் இம்மனம்என்றதை, அடக்கவல்ல வன் ஐயபவக்கடல், கடக்கவல்லவனுகுங் கடிதரோ" என்பது திடப்பட்டு "உடையவன் மூக்குறுங்கயிற்றி னுய்க்குமேல், விடையவன் கைவழிமேவுமாறுபோல், நடைபெறுமுலகமோர் நாதனுலென்ருல், படிமிசை

யொருவருக்கொருவர் பற்றேவன்" என்கிறபடி யாவும் பகவத் சங்கற்பமென்பது நிலைபெறும். நிலைபெறவே நான் எனதென்னும் அகங்கார மமகாரங்களொழிந்து, "நன்ருய் ஞானங்கடந்துபோய்நல்லிந்திரியமெல்லாமீர்த், தொன்ருய்க்கிடந்தவரும் பெரும்பாழூலப்பிலதனை யுணர்ந்துணர்ந்து சென்றுங் கின்பதுன்பங்கள் செற்றுக்களைந்து பசையற்று" நித்யானந்த பதத்தையடையலாகும். ஆகையால் நீ சமுசாரபிரமை மேலிட்டுத் தவிப்பதைவிட்டுத் தத்துவாராய்ச்சியிற் றலையிட்டுச் சற்குருமுகமாய்த் தெளிவடைந்து உடனே ஸ்ரீகாந்தனைச் சரணடைவாயாக.

"தாயே தந்தையென்றுந் தாரமே கிளைமக்களென்றும்
நோயேபட்டொழிந்தே னுன்னைக்காண்பதோராசையினால்
வேயேய்பூம்பொழில்சூழ் விரையார்திருவேங்கடவா
நாயேன்வந்தடைந்தேனல்கி யாளென்னைக்கொண்டருளே"

"ஆராவியற்கை யவாநீப்பினந்நிலையே
பேராவியற்கைதரும்."

கூ. ஸத்ஸங்கத்வே நிஸ்ஸங்கத்வம்
நிஸ்ஸங்கத்வே நிர்மோஹத்வம்
நிர்மோஹத்வே நிச்சலதத்வம்
நிச்சலதத்வே ஜீவன்முக்தி: (பஜ)

(இதன் பொருள்.)

ஸத்ஸங்கத்வே - உத்தமர்களுடைய கூட்டுறவுண்டானால், நிஸ்ஸங்கத்வம்-(யான் எனதென்னும்) அபி

மானம் ஒழியும், நிஸ்ஸங்கத்வே - அபிமானம் ஒழியின், நிர்மோஹத்வம்- ஆசை ஒழியும், நிர்மோஹத்வே - ஆசை ஒழியின், நிச்சலதத்வம் - குற்றமற்றஞானம் உண்டாகும், நிச்சலதத்வே - அப்பழுதற்றஞானத்தினல், ஜீவன் முக்தி: - ஜீவன் முக்தி சித்தியாம், ஆகையால் பஜகோவிந்தம் - ஸ்ரீயஃபதியைப் பஜிக்கக்கடவாயாக.

(விளக்கவுரை.)

"அரிது மானிடயாக்கை பெற்றிடல் பெறும் யாக்கை, எரியுமின்னென விறந்திடு மிறந்திடாமுன்னம், மரகதப்பசும் பாசடைத்துளவநாண்மாலை, கரியவன்றனக் கன்பரைக்காண்டலோவரிதே", "அரியவற்றுளெல்லாமரிதே பெரியாரைப் பேணித்தமராக் கொளல்" இத்யாதி வசனங்களை நோக்குமிடத்து நன்னெறி விரும்புமொருவன் அதனைப்பெற வுடனே சாதுக்கள் சங்கத்தை யடையவேண்டும் என்று ஏற்படுகின்றது. சாதுக்களாவார் சத்தான பகவானொருவனையே சார்பெனக்கொண்டு அவனது சரீரபூதரான சேதநா சேதனங்களிடம் ராகத்வேஷமின்றி யிதத்தை நாடுமேவராய்த் தண்ணளி பூண்டொழுகுமவர். இத்தகைய பெரியார் ஈச்வரனது அருளைப் பூரணமாகப் பெற்றோ ராதலின் அவர்களை அடையுமொருவன் விரைவில் அபிமானப் பற்றொழிந்து நிரர்சைமேலிட்டு மனனகமலமற மலர்மிசை யெழுதரும் மனனுணர்வாகிய

மேலான ஞானத்தைப் பெற்று முத்திகூடுவன் என்பது திண்ணம். ஈச்வரனருளை நேரே யடைய முயல்வதைவிட அவனது அடியார்கள் மூலமாக அடைய முயல்வதுவே சுலபமான வழியாம். சூரிய வெப்பத்தின் தன்மையை உடனே யறியவேண்டின் அது பட்டுள்ள மணற்கண்ணன்றோ செல்லவேண்டும். இவ்வடியார்களது சங்கம் கிடைப்பதற்கும் ஈச்வரனருள் வேண்டுமல்லவா? ஆகையால் நீ உடனே சாதுக்களான ஈச்வரனடியார்களை யடைந்து அவர்களுடைய கிருபா விசேஷத்தால் மேலான நிலையைப் பெறுவதற்கு எம்பெருமானைப் பஜிப்பாயாக.

"ஆதியந்தமனந்தமற்புத மானவானவர்தம்பிரான்
பாதமாமலர்சூடும் பத்தியிலாதபாவிகளுய்ந்திடத்
தீதினன்னெறிகாட்டியெங்குந் திரிந்தரங்கனெம்மானுக்கே
காதல்செய்தொண்டர்க் கெப்பிறப்பிலுங் காதல்செய்யு
மென் னெஞ்சமே."

௧௦. வயஸிகதேக: காமவிகார:
சுஷ்கேநீரே க:காஸார:
க்ஷீணேவித்தே க:பரிவார:
ஜ்ஞாதேதத்வே கஸ்ஸம்ஸார: (பஜ)

(இதன்பொருள்)

வயஸிகதேகஃ காமவிகாரஃ - வார்த்திகப் பருவத்

தில் காமவிகாரம் எவ்வகையதாம்? சுஷ்கேநீரே க:கா ஸார: - ஜலம் வற்றினல் குளம் என்னும்? க்ஷீணே வித்தேக:பரிவார: - செல்வங் குறைந்தால் பரிவார ஜனங்கள் எவ்வாருவர்? ஜ்ஞாதேதத்வேகஸ்ஸம்ஸார:- தத்வஞானமுண்டானுல் சமுசாரம் யாதாகும்? இதை யுணர்ந்து, பஜகோவிந்தம் - பகவானைப்பஜி.

(விளக்கவுரை)

ஒருவனுக்கு யௌவனப் பருவத்திலிருந்த காமவி ச்சையானது வார்த்திகப்பருவத்தில் இல்லை. ஏனெனி ல் அப்போது தேகக் கட்டானது தளர்வடைந்து புலன்கள் தத்தமக்குரிய விஷயங்களைப் பூரணமாக வேற்கும் சக்தியற்றமையால் "புலன்களைய மெய்பின் மூத்துப் போந்திருந் துள்ளமெள்கி"ய பருவத்தில் தான் "பண்டுகாமரானவாறும் பாவையர்வாயமுதம், உண்டவாறும் வாழ்ந்தவாறும் ஒக்கவுரைத்திரு" மும் போது இவனைக்காணும் "செப்பனேர்மென் கொங்கை நல்லார்" பலரும் எளனஞ்செய்து நகைப்புறுவரே யன்றிக்கிட்டார். ஜலமில்லாத குளமும் குளமாகாது; வெறும் பள்ளமென்றே சொல்லப்படும். ஐசுவரிய முள்ளபோது கூடியிருந்த பரிஜனங்கள் அது இல்லாத போது அகலுவார்கள். அஞ்ஞானத்தால் விளைந்த சமு சாரமானது ஞானம் வந்தபோது நசிந்து போகும். எப்படி யௌவனமின்றாயின் காமமின்றே, ஜலமின்

ருயின் குளமின்றே, ஐசுவரியமின்ருயின் பரிஜனமின்
றே அப்படி அஞ்ஞானமின்ருயின் சமுசாரமின்ரும்.
எனவே தத்வஞானம் ஒருவனுக்குதித்தால்தான் அவ
னைப் பந்தித்திருந்த சமுசாரம் நீங்கும் என்றேற்பட்
டது. ஆகையால் அந்த ஞானத்தை யடைந்து பகவா
னைப்பஜிப்பாயாக.

கக. மாகுருதனஜன யௌவனகர்வம்
ஹரதிநிமேஷாத் காலஸ்ஸர்வம்
மாயாமயமித மகிலம்ஹித்வா
ப்ரஹ்மபதம்த்வம் ப்ரவிசவிதித்வா. (பஜ)

(இதன்பொருள்.)

மாகுருதனஜன யௌவனகர்வம் - தனத்தாலும், ஜனக்கூட்டத்தாலும், யௌவனபருவத்தாலும் செருக்கடையாதே, ஹரதிநிமேஷாத் காலஸ்ஸர்வம் - காலமானது யாவற்றையும் ஓர் கணப்போதில் கவர்ந்து கொள்கின்றது, மாயாமயமித மகிலம்ஹித்வா-மாயையின்மயமான பிரபஞ்சமனைத்தையும் நிவர்த்திசெய்து, ப்ரஹ்மபதம்த்வம் ப்ரவிச விதித்வா - ப்ரஹ்மமான பகவத்சொரூபத்தை யுள்ளபடி யுணர்ந்து அதனையடைந்து, பஜகோவிந்தம் - பகவானைப் பஜிப்பாயாக

(விளக்கவுரை.)

செல்வம், உற்ருர் பெற்ருர் முதலிய ஜனக்கூட்டம், யௌவனம் ஆகிய இவற்றின் நிலையாமையைப் பற்றி

முன் சுலோகங்களில் நன்கு விளக்கியபடியால் இவற்ருல் அகங்கார மடைவது கேட்டையேதரும். "இடையில் கோவணமுமின்றி யிங்குதித்தோ மிவ்வாறே, கடையினில் வெருங்கையோடு கழிகுவநடுவிற் சேரும், உடைமையாற் பெருமையென்னே வூர்க்கெலாம்பொதிசுமக்கும், விடைதருக்குற்ற தென்ன வீண்செருக்குற்ருய் நெஞ்சே" என்கிறபடி செல்வச்செருக்குமோர் செருக்கா. "செல்வமுண்டானபோது கொண்டாட்டம் செல்வமோய்ந்தால் சகலரு மோட்டம்" என்னுமாபோல் பரிஜனங்களும் சமயத்தில் கைவிடத்தக்கவரே என்பதை உலகானுபவமாக வறியக்கூடும். யௌவனபருவமும் மூப்பை யெதிர்பார்ப்பதால் பயன்படுவதின்ரும். இம்மதிமயக்கும் காலத்தால் நேர்ந்ததாகும். இதனை "அந்தரமீது காற்ரு லருங்கதி யடையாநின்ற, கந்தரங் காற்றிஞ லிக்கதியெனக் கருதாதேபோல், இந்திரன் வேதனுதி யிமையவரானும் வெல்லா, வெந்திறற்காலந்தன்னுல் விளைந்தன வினையென்ருேரான்" என்னும் ஸ்ரீமத்பாகவத வசனத்தா லறியலாகும். இத்தகைய காலத்தின் வசப்பட்டுள்ள பிரபஞ்சத்தைக்கண்டு மயங்கி நிலைத்து வாழ்வதாக நினைத்து நாளை அவமாக்காதே. "நாச்செற்று விக்குள்மேல் வாராமுன் நல்வினை,மேற்சென்று செய்யப்படும்" என்கிறபடி பேச்சொடுங்க நாவையடக்கி விக்கலானது எழுவதற்கு முன்னரே அதாவது இறப்பதற்குள்ளாகவே வீட்

டிற் காதாரமான அறத்தை விரைவில் செய்யவேண்டு மாகையாலே உடனே சர்வசார்பாயுள்ள பகவத்சொரூபத்தை யறிந்து அப்பரம்பொருளின் கல்யாணகுணங்களில் ஈடுபடக் கடவாய்.

"இந்திரன் பிரமனீசனென் றிவர்க ளெண்ணில்பல் குணங்களே யியற்றத், தந்தையுந் தாயு மக்களுமிக்க சுற்றமுஞ் சுற்றிநின்றகலாப், பந்தமும் பந்தமறுப்பதோர் மருந்தும் பான்மையும் பல்லுயிர்க் கெல்லாம், அந்தமும் வாழ்வு மாயவெம் பெருமா னரங்கமா நகரடைந்தானே."

"வீடுமனையுங் கிளையு மறைமுனிவர்
தேடுமுயர்வீடுஞ் சென்னெறியும் -பீடுடைய
எட்டெழுத்துந் தந்தவனே யென்றிரா தாருறவை
விட்டிடுக கண்டீர் விதி."

௧௨. தினயா மின்யௌ ஸாயம் ப்ராத:
சிசிரவஸந்தௌ புநராயாத:
கால: க்ரீடதி கச்சத்யாயு:
ததபிநமுஞ்சதி ஆசாவாயு: (பஜ)

(இதன்பொருள்.)

தினயாமின் யௌஸாயம் ப்ராத:-பகல், இரவு, மாலை, உதயம் என்பனவும், சிசிரவசந்தௌ - பின்பனி, வசந்தருதுக்களும், புநராயாத:-மாறிமாறித் தோன்றுகின்றன, (இவ்விதம்) கால: க்ரீடதி-காலமானது விளை

யாட்டைக் கொண்டிருக்கிறது, கச்சத்யாயு:-வாழ்நாள் கழிகின்றது, (ஆயினும்) ஆசாவாயு: - காற்றையொத்த ஆசையோ, ததபினமுஞ்சதி - ஒருவனையும் விட்டுப் பிரிகிறதில்லை.

(விளக்கவுரை)

ஸத்வாதிகுணத்ரய சூன்யமான காலதத்துவம்பிரகிருதி ப்ராகிருதங்களின் பரிணாமங்களுக்கு ஹேதுவாயும் நிமிஷம், காஷ்டை, கலை, முகூர்த்தம், திவஸம், பக்ஷம், காலை. மாலை, மாசமாதி ரூபங்களாகப் பரிணமித்து நித்யமாயும், ஈஸ்வரனுக்கு க்ரீடாபரிகர (லீலோபகரண) சரீரபூதமாயுமிருப்பதொன்று. "இறப்பே நிகழ்வே யெதிரதென்னுந், திறத்தியன் மருங்கிற் றெரிந்தனருள்ளப் பொருணிகழ்வுரைப்பது காலமாகும்" என்னும் தொல்காப்பியச் சூத்திரமும் ஈங்கறிதற்பாற்றும். "படைப்பதுங்காலந்தானே படைத்தவையாவுநேராய்த், துடைப்பதுங்காலந்தானே தொல்லையி றில்லாக் காலத், திடைப்படத் தோன்றிமாயு மியாவையுமியாவரேனுங், கடப்பவரில்லைக் காலங்காலமே கடந்துநிற்கும்" என்றும் "நிகிலவுலகுநடக்கும் வகை நேரே நியமிக்கின்றததது, சகலவுயிர்க்கு முயிருமது தானே யுள்ளாயிருக்குமது, அகிலவறிவு முடையததது வாதலான் மற்றக்காலம், பகரவுறுவர் சனுதனனும் பகவான் புருடோத்தமனாக" என்னும் வரும் ஈசுரகீதை வசனப்படியும், "கால்ஸ்வரூபம் விஷ்ணோஸ்சயர்மயோக்தம் தவாநக" என்னும் ஸ்ரீவிஷ்

று புராண வசனத்தின்படியும் பகவத்சொரூபமாயுள்ளது காலமென்றேற்படுகிறது. இவ்வாறான காலசத்துவத்தை யுய்த்துணராத மக்கள் "ஐம்பொறிக்கிரை தேடியலமந்து, வெம்புகின்ற வெறிவிருந்" தாகின்றனர். "நாளெனவொன்று போற்காட்டி யுயிரும் வாளதுணர்வார்ப் பெறின்" என்கிறபடி ஆழ்ந்து நோக்கின் உயிரானது காலமென்னும் வாளினது வாயிடத்திருக்கின்றது அதாவது சகலவுயிரிடத்தும் மரணம் காத்துகொண்டே யிருக்கிறது என்னும் பொருள் சித்திக்கின்றதன்றோ. என்றால் காலமானது தன்னை வாளென்று அறிய மாட்டாதவரை நமக்குப் பொழுது போகாநின்றதென்று மகிழும்படி அவர்க்குத் தன்னை நாளென்று அளவு செய்யப் படுவதாகிய ஒருகால அளவுபோல் காட்டி மயக்கி அவரது உயிரைக்கவரும் வாளாயுதமா யிருக்கின்றது. "எறிந்திடுமரத்தில் வாழு மிருஞ்சிறைப்பறவையப்பாற், பறந்திட நினையாதாகிற் பயக்குமோர் நன்மையுண்டே, குறைந்து நாளென்னுங் கூர்வாளரிதரக் குன்றுமாக்கை, உறைந்துயர் நெறியி னெட்டா வுயிர்க்குநன் குறுங்கொலம்மா" என்னும் ஸ்ரீமத்பாகவத வசனம் வெட்டப்படும்படியாகிய ஓர்மரத்தில் வாழும் பறவையானது அம்மரத்தை விட்டு அப்பால் பறந்துபோக நினையாவிடின் பயன் யாதோ. அதுபோல் நாளென்னுங்கூரிய வாளினாற் குறைக்கப் பட்டழிவுறும் சரீரத்தில் வாழும் ஜீவன்

வீட்டுநெறியை நோக்காவிடின் பிறவித்துன்பம் நீங்கப்பெறுமா என்றுணர்ந்தவில்லையா? "வைகலும் வைகல் வரக்கண்டும் அஃதுணரார், வைகலும் வைகல் வைகுமென்று இன்புறுவர், வைகலும் வைகல் தம் வாழ்நாள்மேல் வைகுதல், வைகலை வைத்துணராதார்" என்கிறபடி தினந்தோறும் பொழுது கழிதலைக்கண்டும் அது வீணே கழிவதற்காக வருந்தப் படாமல் மகிழ்ச்சியுறுபவரை அறிவுடையார் மதிப்பரோ? இம்மதிகேடர் "வாசமாய் நமன் வாழ்வது பார்த்திடார் ஓசைநீர்க் கடலுற்றமிழி மொக்குளபோல், பேசமாயுடற்பிண்ட மெய்யாமென, ஆசைமாகடல் மூழ்கியழுங்குவார்" என்பது திண்ணம். ஆசையுள்ளளவும் துன்பமுண்டு. ஆகையால் இக்கொடிய ஆசைப்பேயை அடித்துத்துறத்தும் மார்க்கத்தை விரைவிற்தேடு. அம்மார்க்கம் பகவத் கடாக்ஷத்தால் வரவேண்டுமாதலால் அப்பரஞ்சோதியைப் பஜித்து நிராசையுற்று நிரதிசய இன்பவீட்டை அடைவாயாக.

"மாற்றமுளவாகிலுஞ் சொல்லுவன்மக்கள்
தோற்றக்குழி தோற்றுவிப்பாய்கொலென்றின்னம்
ஆற்றங்கரைவாழ் மரம்போலஞ்சுகின்றேன்
நாற்றச்சுவையூறொலி யாகியநம்பீ."



துவாதச மஞ்சரி காபிரசேஷ:
கதிதோ வையா கரணஸ்யைஷ:
உபதேசோபூத் வித்யாநிபுணை:
ஸ்ரீமச்சங்கர பகவச்சரணைః.

(இதன்பொருள்.)

அறுபத்து நான்கு வித்தைகளிலும் வல்லவராய் பூஜ்யராய் எழுந்தருளிய ஸ்ரீமத்சங்கராசாரிய ஸ்வாமிகள் வியாகரண சாஸ்திரம் ஒன்றையே கற்று ஆத்மவிசாரமற்றிருந்த பண்டிதனொருவனுக்குப் புஷ்பக்கொத்தையொத்த ஷை பன்னிரண்டு மஞ்சரிகா சுலோகங்களினால் நெடுங்காலம் சிரமைப்பட்டுத் தெரியவேண்டிய பொருள்கள் முழுமையும் தமது மகிமையால் மிக்க சுருங்கிய காலத்திலேயே உபதேசித் தருளினார் என்பதாம்.



உயர்வற வுயர்நல முறும்வழி யுதவிய
மயர்வற மதிநல மருவிய பெரியவ
னயர்வறு சங்கர னடியிணை வாழிவெந்
துயரற வழிபடு தொல்புவி வாழியே.

முற்றும்.

# புத்தக விளம்பரம்.

| | | ரூ. | அ. | ப. |
|---|---|---|---|---|
| 1 | குருபரம்பரா ப்ரபாவம் பன்னீராயிரப்படி, ஆறாயிரப்படி. ... | 2 | 0 | 0 |
| 2 | யதீந்த்ரப்ரணவப்ரபாவம் ஏத்தப்ரதி ... | 0 | 8 | 0 |
| 3 | நித்யாநு ஸந்தானம் ... ... | 0 | 6 | 0 |
| 4 | நாலாயிரப்ரபந்தம் ... ... ... | 2 | 0 | 0 |
| 5 | திருப்பாவை மூவாயிரப்படி, வியாக்யானம் | 0 | 12 | 0 |
| 6 | உபதேசரத்னமாலை, வியாக்யானம் ... | 0 | 14 | 0 |
| 7 | பஞ்சரகஸ்யம் ... ... ... | 0 | 3 | 0 |
| 8 | நிகமனப்படி தொடங்கி முமுக்ஷுப்படி ... | 0 | 0 | 6 |
| 9 | இராமதத்வ தீபிகை ... ... ... | 0 | 0 | 9 |
| 10 | ஸ்ரீராமர் வைபவ சிந்தாமணி ... ... | 0 | 0 | 6 |
| 11 | பஜகோவிந்தம் தமிழ் விசேடவுரை ... | 0 | 1 | 0 |
| 12 | த்ரௌபதி சரணாகதிநிஷ்டை ... ... | 0 | 0 | 6 |
| 13 | இராமானுஜ ரகஸ்யம் ... ... | 0 | 2 | 0 |
| 14 | அந்திமோபாய நிஷ்டை ... ... | 0 | 2 | 0 |
| 15 | வராகநைனார் சரமஸ்லோகம் ... ... | 0 | 1 | 0 |
| 16 | புருடசூக்தம் தமிழ் ... ... ... | 0 | 1 | 0 |

இன்னும் வேண்டிய கிரந்தங்கள் எழுதிக் கேட்டுக்கொள்ளவும்.

செஞ்சி. இ. அரங்கசாமி முதலியார்,
செ. இ. திருவேங்கட முதலியார்,
நெ, 17, பிட்டர்ஸ் ரோட் S. E. போஸ்ட்
திருவல்லிக்கேணி, மதராசு.